ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2016 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2016 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2016

| | | |
|---|---|---|
| ඉතිහාසය I (I කොටස)<br>வரலாறு I (பகுதி I)<br>History I (Part I) | 25 T I | පැය තුනයි<br>மூன்று மணித்தியாலம்<br>Three hours |

**இலங்கை வரலாறு - ஆதி காலம் முதல் கி.பி. 1978 வரை**

சுட்டெண்: ....................................

**அறிவுறுத்தல்கள்:**

* இப்பகுதியில் **40** வினாக்கள் உள்ளன. **எல்லா** வினாக்களுக்கும் **இவ்வினாப்பத்திரத்திலேயே** விடை எழுதுக.
* ஒவ்வொரு வினா தொடர்பாக **ஐவைந்து** விடயங்கள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் **ஒன்று** சரியானது. அந்த வினாவின் சரியான விடையைத் தெரிவு செய்து, அதனை இங்கு குறிப்பிடப்பட்ட **அறிவுறுத்தல்களுக்கமைய உமது விடையைக் குறித்துக் காட்டுக.**
* இப்பகுதிக்கு **40** புள்ளிகள் வழங்கப்படும்.
* **இரண்டு** பகுதிகளுக்கும் வழங்கப்பட்டுள்ள நேரம் **மூன்று மணித்தியாலங்களாகும்.** உமது விடைத்தாள்களை ஒப்படைக்கும் பொழுது **பகுதி I** இற்கான விடைகளை எழுதிய பின்னர், **பகுதி II** இற்கான விடைத்தாளுடன் **இணைத்து ஒப்படைக்க வேண்டும்.**

## பகுதி I

● **1 - 5** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் **ஐந்து** பெயர்கள் வீதம் தரப்பட்டுள்ளன. அப்பெயர்களுள் **ஒன்று** ஏதோ காரணத்தினால் ஏனையவற்றுடன் **பொருந்தாது. பொருந்தாத** அப்பெயரை இனங்கண்டு, அதன் **இலக்கத்தை அடைப்புப் புள்ளிக் கோட்டில்** எழுதுக.

**1.** (1) களுகங்கை (2) மகாவலி கங்கை (3) அம்பன் கங்கை
(4) வளவை கங்கை (5) களனி கங்கை (.........)

**2.** (1) தப்ரபான (2) பளைசிமுண்டு (3) ஷெரன்டிப்
(4) ஜனநாத - மங்களம் (5) ஸிலான் (.........)

**3.** (1) மாதோட்டம் (2) ஊராத்துறை (3) கோகர்ணம்
(4) ஜம்புகோள பட்டணம் (5) கோரதோட்ட (.........)

**4.** (1) சேன - குத்திக (2) அசேலன் (3) எல்லாளன்
(4) குட்டபாரிந்த (5) மாகன் (.........)

**5.** (1) தந்துரேப் போர் (2) பலனப் போர் (3) ரந்தெனிவலப் போர்
(4) கண்ணொருவப் போர் (5) கட்டுவனப் போர் (.........)

● **6 - 10** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் **ஐந்து சோடிப் பெயர்கள்** தரப்பட்டுள்ளன. அவற்றுள் ஒரு சோடியிலுள்ள பெயர்கள் ஒன்றுடன் ஒன்று **பொருந்தவில்லை. பொருந்தாத** அச்சோடியை இனங்கண்டு அதன் **இலக்கத்தை அடைப்புப் புள்ளிக் கோட்டில்** எழுதுக.

**6.** (1) தேமுண்டோ - அரிஸ்டோட்டில்
(2) ஜியோகிரவியா (Geographia) - தொலமி
(3) ரொப்போகிரபியா கிறிஸ்ரியானா - கொஸ்மஸ்
(4) இலங்கையினை உலகியல் சார்பாகவும் ஆன்மீக ரீதியிலும் கைப்பற்றியமை (The Temporal & Spiritual Conquest of Ceylon) - பிரான்கோ வலன்ரைன்
(5) யாழ்ப்பாண வைபவமாலை - மயில்வாகனம் (.........)

**7.** (1) மகிந்த தேரர் - தேவநம்பியதீசன்
(2) ஹேமமாலா - தந்த குமார - சிரிமேகவண்ண
(3) புத்தகோச தேரர் - புத்ததாச
(4) பாகியன் - மகாநாம
(5) உபாலி தேரர் - கீர்த்தி ஸ்ரீ ராஜசிங்கன் (.........)

[பக். 2 ஐப் பார்க்க

**8.** (1) யொரிஸ் ∴பான் - ஸ்பில்பேர்ஜன் - முதலாம் விமலதர்ம சூரியன்
(2) யோன் பைபஸ் - கீர்த்தி ஸ்ரீ ராஜசிங்கன்
(3) ஹியூ பொய்ட் - இரண்டாம் ராஜசிங்கன்
(4) ரொபேர்ட் அன்ரூஸ் - ராஜாதி ராஜசிங்கன்
(5) மக்டொவால் - ஸ்ரீ விக்கிரம ராஜசிங்கன் (.........)

**9.** (1) அம்பன்பொல ராலவின் கலவரம் - யான் ஷ்ரொய்டர்
(2) பிரித்தானியருக்கெதிரான 1817 - 18 ஆம் ஆண்டுப் போராட்டம் - ரொபர்ட் பிறவுண்ரிக்
(3) பிரித்தானியருக்கெதிரான 1848 ஆம் ஆண்டுக் கலவரம் - ரொறிங்ரன்
(4) 1883 ஆம் ஆண்டு கொட்டாஞ்சேனைக் கலவரம் - ஜேம்ஸ் லோங்டன்
(5) 1915 ஆம் ஆண்டு சிங்கள - முஸ்லிம் கலவரம் - ரொபர்ட் சாம்மர்ஸ் (.........)

**10.** (1) வலானே ஸ்ரீ சித்தார்த்த தேரர் - பரம தம்ம சேதியப் பிரிவெனா
(2) ஆறுமுக நாவலர் - வண்ணார்பண்ணை சைவப்பிரகாச வித்தியாசாலை
(3) ஹிக்கடுவே ஸ்ரீ சுமங்கள தேரர் - வித்தியோதயப் பிரிவெனா
(4) இரத்மலானை ஸ்ரீ தர்மாலோக தேரர் - வித்தியாலங்காரப் பிரிவெனா
(5) T. B. ஜாயா - ஸாஹிரா கல்லூரி (.........)

- **11 - 15** வரையுள்ள ஒவ்வொரு வினாவிலும் சில பெயர்கள் / கூற்றுகள் / திகதிகள் ஆகியவற்றின் தொகுதிகள் **X, Y** என்னும் நிரல்களில் தரப்பட்டுள்ளன. **Y** நிரலில் தரப்பட்டுள்ள பெயர்கள் / கூற்றுகள் / திகதிகள் **X** நிரலில் தரப்பட்டுள்ளவற்றுடன் ஏதோ ஒரு வகையில் தொடர்புபட்டவை. ஆனால் அவை சரியான தொடர் ஒழுங்கில் **தரப்படவில்லை. Y** நிரலில் உள்ளவற்றை **X** நிரலில் உள்ளவற்றுக்கேற்பச் சரியாக ஒழுங்குபடுத்தும்போது கீழே தரப்பட்டுள்ள ஐந்து சேர்மானங்களுள் **ஒன்று** சரியானதாகும். சரியான சேர்மானத்தின் **இலக்கத்தை அடைப்புப் புள்ளிக் கோட்டில்** எழுதுக.

**11.**

| X | Y |
|---|---|
| (i) மிரிசவேதி தாதுகர்ப்பம் | A முதலாம் பராக்கிரமபாகு |
| (ii) அபயகிரி தாதுகர்ப்பம் | B முதலாம் ராஜசிங்கன் |
| (iii) கல் விகாரை | C நான்காம் புவனேகபாகு |
| (iv) கடலாதெனிய | D துட்டகாமினி அபயன் |
| (v) பெரண்டி கோவில் | E வட்டகாமினி அபயன் |

(1) EDABC (2) DEACB (3) CBDAE (4) CDAEB (5) BEADC (.........)

**12.**

| X | Y |
|---|---|
| (i) மிகிந்தலை சாசனம் | A வணிக நகர நிர்வாகம் பற்றிய விதிகள் |
| (ii) வேவெல் கட்டிய கல்வெட்டு | B புதல்நாவுக்குச் சிறப்புரிமை வழங்கியமை |
| (iii) பதுளைத் தூண் கல்வெட்டு | C முதலாம் பராக்கிரமபாகு இரண்டாம் கஜபாகு ஆகியோருக்கிடையிலான உடன்படிக்கை |
| (iv) பனாக்கடுவைச் செப்பேடு | D கிராமங்களின் நீதி பரிபாலனம் பற்றிய விதிகள் |
| (v) சங்கம விகாரைக் கல்வெட்டு | E விகாரை நிலங்களின் முகாமைத்துவம் பற்றிய விதிகள் |

(1) EDABC (2) DEACB (3) CBDAE (4) CDAEB (5) BEADC (.........)

**13.**

| X | Y |
|---|---|
| (i) மல்வானை உடன்படிக்கை | A கீர்த்தி ஸ்ரீ ராஜசிங்கன், ஒல்லாந்தர் ஆகியோருக்கு இடையிலான உடன்படிக்கை |
| (ii) 1638 ஆம் ஆண்டு உடன்படிக்கை | B D. S. சேனாநாயக்காவிற்கும் பிரித்தானிய அரசாங்கத்துக்கும் இடையிலான உடன்படிக்கை |
| (iii) 1766 ஆம் ஆண்டு உடன்படிக்கை | C கோட்டே பிரதானிகளுக்கும் போர்த்துக்கேயருக்கும் இடையில் ஏற்பட்ட உடன்படிக்கை |
| (iv) 1815 ஆம் ஆண்டு கண்டி உடன்படிக்கை | D இரண்டாம் இராஜசிங்கன் ஒல்லாந்தர் ஆகியோருக்கிடையிலான உடன்படிக்கை |
| (v) 1947 ஆம் ஆண்டு பாதுகாப்பு உடன்படிக்கை | E கண்டிப் பிரதானிகளுக்கும் பிரித்தானியருக்கும் இடையிலான உடன்படிக்கை |

(1) EDABC (2) DEACB (3) CBDAE (4) CDAEB (5) BEADC (.........)

[பக். 3 ஐப் பார்க்க

**14.** X / Y

| X | Y |
|---|---|
| (i) மகா பத்த | A யானை பராமரிப்புத்துறை |
| (ii) கொட்டல் பத்த | B நெசவாளர் துறை |
| (iii) குருவே பத்த | C போக்குவரத்துத் துறை |
| (iv) மடிகே பத்த | D கறுவாத் துறை |
| (v) கின்னர பத்த | E கம்மாளர் துறை |

(1) EDABC (2) DEACB (3) CBDAE (4) CDAEB (5) BEADC (.........)

**15.** X / Y

| X | Y |
|---|---|
| (i) லங்கா சமசமாஜக் கட்சி | A S.A. விக்கிரமசிங்க |
| (ii) பொல்ஷெவிக் - லெனினிசக் கட்சி | B G.G. பொன்னம்பலம் |
| (iii) பொதுவுடமைக் கட்சி | C S.J.V. செல்வநாயகம் |
| (iv) தமிழ் காங்கிரஸ் | D கொல்வின் R.D. சில்வா |
| (v) தமிழரசுக் கட்சி | E N.M. பெரேரா |

(1) EDABC (2) DEACB (3) CBDAE (4) CDAEB (5) BEADC (.........)

- **16 - 20** வரையுள்ள ஒவ்வொரு வினாவினதும் சரியான விடையைத் தெரிவுசெய்து, அதன் **இலக்கத்தை அடைப்புப் புள்ளிக் கோட்டில்** எழுதுக.

**16. இலங்கை வரலாறு பற்றிய மூலங்களை மேல்வரும் நூல்களடங்கிய வரிசைகளில் சரியான காலக்கிரம அடிப்படையில் குறிப்பிடுவது யாது?**

(1) தீபவம்சம், மகாவம்சம், பூஜாவலி, வம்சத்தபகாசினி, ராஜாவலி
(2) தீபவம்சம், பூஜாவலி, மகாவம்சம், வம்சத்தபகாசினி, ராஜாவலி
(3) தீபவம்சம், மகாவம்சம், வம்சத்தபகாசினி, பூஜாவலி, ராஜாவலி
(4) தீபவம்சம், மகாவம்சம், வம்சத்தபகாசினி, ராஜாவலி, பூஜாவலி
(5) மகாவம்சம், தீபவம்சம், வம்சத்தபகாசினி, பூஜாவலி, ராஜாவலி (.........)

**17. மேல்வருவனவற்றுள் உருகுணையில் ஆட்சிபுரிந்த அரசர்களின் பெயர்களை காலக்கிரம வரிசையில் கூறுவது யாது?**

(1) மகாநாக, யட்டாலக திஸ்ஸ, கோட்டாபய, காக்கவண்ண திஸ்ஸ, துட்டகாமினி அபய
(2) மகாநாக, கோட்டாபய, யட்டாலக திஸ்ஸ, காக்கவண்ண திஸ்ஸ, துட்டகாமினி அபய
(3) மகாநாக, கோட்டாபய, காக்கவண்ண திஸ்ஸ, யட்டாலக திஸ்ஸ, துட்டகாமினி அபய
(4) மகாநாக, காக்கவண்ண திஸ்ஸ, துட்டகாமினி அபய, கோட்டாபய, யட்டாலக திஸ்ஸ
(5) மகாநாக, யட்டாலக திஸ்ஸ, காக்கவண்ண திஸ்ஸ, துட்டகாமினி அபய, கோட்டாபய (.........)

**18. மேல்வருவனவற்றுள் எந்தப் பட்டியல் மத்திய கால இலங்கையின் தலைநகரங்களின் பெயர்களைச் சரியான காலக்கிரம வரிசையில் குறிப்பிடுகின்றது?**

(1) தம்பதெனிய, குருணாகல், யாப்பகூவ, கம்பளை, கோட்டை
(2) தம்பதெனிய, யாப்பகூவ, குருணாகல், கம்பளை, கோட்டை
(3) குருணாகல், தம்பதெனிய, யாப்பகூவ, கம்பளை, கோட்டை
(4) யாப்பகூவ, தம்பதெனிய, குருணாகல், கம்பளை, கோட்டை
(5) தம்பதெனிய, யாப்பகூவ, கம்பளை, குருணாகல், கோட்டை (.........)

**19. பிரித்தானியர் ஆட்சிக்காலத்தில் ஏற்பட்ட அரசியலமைப்பு மாற்றங்களை மேல்வருவனவற்றுள் எந்தப் பட்டியல் சரியான காலக்கிரம வரிசையில் குறிப்பிடுகின்றது?**

(1) கோல்புறூக், மக்கலம், டொனமூர், மானிங், சோல்பரி
(2) கோல்புறூக், மானிங், மக்கலம், டொனமூர், சோல்பரி
(3) கோல்புறூக், டொனமூர், மானிங், மக்கலம், சோல்பரி
(4) கோல்புறூக், மானிங், டொனமூர், மக்கலம், சோல்பரி
(5) கோல்புறூக், மக்கலம், மானிங், டொனமூர், சோல்பரி (.........)

**20. இலங்கை சுதந்திரம் அடைந்தபின் எதிர்க்கட்சித் தலைவராக இருந்தவர்களின் பெயர்களை மேல்வருவனவற்றுள் எந்தப் பட்டியல் சரியான வரிசைக்கிரமத்தில் குறிப்பிடுகின்றது?**

(1) N.M. பெரேரா, S.W.R.D. பண்டாரநாயக்க, சிறிமாவோ பண்டாரநாயக்க, டட்லி சேனாநாயக்க, J.R. ஜெயவர்த்தன
(2) S.W.R.D. பண்டாரநாயக்க, N.M. பெரேரா, சிறிமாவோ பண்டாரநாயக்க, டட்லி சேனாநாயக்க, J.R. ஜெயவர்த்தன
(3) N.M. பெரேரா, J.R. ஜெயவர்த்தன, S.W.R.D. பண்டாரநாயக்க, சிறிமாவோ பண்டாரநாயக்க, டட்லி சேனாநாயக்க
(4) N.M. பெரேரா, S.W.R.D. பண்டாரநாயக்க, டட்லி சேனாநாயக்க, சிறிமாவோ பண்டாரநாயக்க, J.R. ஜெயவர்த்தன
(5) N.M. பெரேரா, S.W.R.D. பண்டாரநாயக்க, J.R. ஜெயவர்த்தன, சிறிமாவோ பண்டாரநாயக்க, டட்லி சேனாநாயக்க (.........)

[பக். 4 ஐப் பார்க்க

- **21 - 25** வரையுள்ள எல்லா வினாக்களுக்கும் ஒரு தலைப்பின் கீழ் **ஐந்து** விடயங்கள் வீதம் தரப்பட்டுள்ளன. அவ்விடயங்களுள் **ஒன்று உரிய தலைப்பிற்குப் பொருந்தாதுள்ளது.** அப்பொருந்தாததைத் தெரிவுசெய்து, அதன் **இலக்கத்தை அடைப்புப் புள்ளிக் கோட்டில்** எழுதுக.

**21.** **யேத்தவன விகாரை**
(1) யேத்தவன விகாரையை மகாசேனன் கட்டினான்.
(2) யேத்தவன விகாரை மகா விகாரையின் எல்லைக்குள் அமைந்திருந்தது.
(3) யேத்தவன விகாரை பிக்கு சங்கத்துக்கு வழங்கப்பட்டது.
(4) யேத்தவன தாதுகோபம் இலங்கையிலுள்ள மிகப்பெரிய தூபியாகும்.
(5) யேத்தவன நிகாயம் யேத்தவன விகாரையை மையமாகக் கொண்ட விகாரையாகும். (.........)

**22.** **தாதுசேனன்**
(1) தாதுசேனன் தமிழரசர்களைத் தோற்கடித்துவிட்டு சிம்மாசனம் ஏறினான்.
(2) தாதுசேனன் லம்பகண்ண வம்சத்தவன்.
(3) மகாநாம தேரர் தாதுசேனனின் தாய்வழி மாமனார்.
(4) தாதுசேனன் கலாவாவியைக் கட்டினான்.
(5) தாதுசேனனைக் காசியப்பன் கொலை செய்தான். (.........)

**23.** **கோட்டை இராச்சியம்**
(1) நிசங்க அளகேஸ்வரன் கோட்டையினை அரணாக அமைத்தான்.
(2) ஐந்தாம் புவனேகபாகுவைக் கோட்டையின் முதல் அரசனாகக் கொள்வர்.
(3) ஆறாம் பராக்கிரமபாகு கோட்டை அரசர்களில் முதன்மையானவன்.
(4) இரண்டாம் இராஜசிங்கன் கோட்டை நகரத்தை அழித்தான்.
(5) தர்மபாலன் ஒரு தர்மாசனம் மூலமாக கோட்டை இராச்சியத்தை போர்த்துக்கேயருக்கு எழுதிக் கொடுத்தான். (.........)

**24.** **கோல்புறூக் - கமரன் ஆணைக்குழுவின் சிபாரிசுகள்**
(1) தேசாதிபதியின் அதிகாரங்களைக் குறைத்தல்.
(2) சட்டசபை நிர்வாக சபை ஆகியவற்றை அமைத்தல்.
(3) ராஜகாரிய முறையினை ஒழித்தல்.
(4) ஒரு முனைப்படுத்தப்பட்ட நீதி, வழக்கு முறையின் உருவாக்கம்.
(5) இலங்கை முழுவதையும் ஒன்பது மாகாணங்களாகப் பிரித்தல். (.........)

**25.** **பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஏற்பட்ட கலாசார மறுமலர்ச்சி**
(1) கிறிஸ்தவ மிசனரிமார்களின் நடவடிக்கைகளின் எதிர் விளைவாகவே பண்பாட்டு மறுமலர்ச்சி ஆரம்பமாகியது.
(2) பௌத்த சமய மறுமலர்ச்சியானது பிரதான மேல், தென் மாகாணங்களை அடிப்படையாகக் கொண்டுள்ளது.
(3) திவ்பிய ஞானசபதம் பௌத்த மறுமலர்ச்சியில் ஒரு முக்கிய பங்கு கொண்டிருந்தது.
(4) வலிசிங்க ஹரிஸ்சந்திர என்பவரே முதலாவது பௌத்த பாடசாலையினை நிறுவினார்.
(5) இஸ்லாமிய மறுமலர்ச்சியில் M.C. சித்திலெப்பை முதன்மையான தலைவராவார். (.........)

- **26 - 30** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் **(A), (B), (C), (D)** என்னும் நான்கு மாற்று விடைகள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் **ஒன்று அல்லது பல** சரியான விடைகளாகும். சரியான விடையை அல்லது விடைகளைத் தெரிவுசெய்து,

**(A)** யும் **(B)** யும் மட்டும் சரியாயின் .................. **1** எனவும்
**(B)** யும் **(C)** யும் மட்டும் சரியாயின் .................. **2** எனவும்
**(C)** யும் **(D)** யும் மட்டும் சரியாயின் .................. **3** எனவும்
**(A)** யும் **(C)** யும் மட்டும் சரியாயின் .................. **4** எனவும்

**ஒரு** விடை மட்டும் அல்லது **இரண்டிற்கு மேற்பட்ட** விடைகள் சரியாயின் ... **5** எனவும் **அடைப்புப் புள்ளிக் கோட்டில்** எழுதுக.

| அறிவுறுத்தல்களின் சுருக்கம் | | | | |
|---|---|---|---|---|
| **1** | **2** | **3** | **4** | **5** |
| **(A)** யும் **(B)** யும் மட்டும் சரி | **(B)** யும் **(C)** யும் மட்டும் சரி | **(C)** யும் **(D)** யும் மட்டும் சரி | **(A)** யும் **(C)** யும் மட்டும் சரி | ஒரு விடை மட்டும் அல்லது **இரண்டிற்கு மேற்பட்ட** விடைகள் சரி |

**26.** **பொலன்னறுவை இராச்சியத்தின் வீழ்ச்சி தொடர்பாக மேல்வரும் கூற்றுகளுள் எது / எவை சரியானது / சரியானவை?**
(A) சந்திரபானுவின் படையெடுப்பின் விளைவாக ஏற்பட்ட அழிவுகள்
(B) பஞ்சங்கள்
(C) காலிங்க, பாண்டிய வம்சத்தவர்களுக்கிடையிலான போட்டிகள்
(D) பலவீனமான அரசர்கள் சிம்மாசனம் ஏறியமை (.........)

[பக். 5 ஐப் பார்க்க

**27. போர்த்துக்கேயரும் யாழ்ப்பாண இராச்சியமும்**

(A) இரண்டாம் சங்கிலி யாழ்ப்பாண இராச்சியத்தின் இறுதியான அரசன் ஆவான்.
(B) போர்த்துக்கேயர் 1619 இல் யாழ்ப்பாணத்தைக் கைப்பற்றினர்.
(C) கொன்ஸ்தாந்தினோ த ப்ரகன்சா யாழ்ப்பாணத்தின் தேசாதிபதியாக நியமிக்கப்பட்டான்.
(D) போர்த்துக்கேயர்கள் இந்து சமயத்துக்குப் பாதுகாவலராக இருந்தனர். (.........)

**28. கரையோர மாகாணங்களில் ஒல்லாந்தரின் நிர்வாகம்**

(A) இலங்கையிலுள்ள ஒல்லாந்தர் வசமான பிரதேசங்களை ஒல்லாந்தக் கிழக்கிந்தியக் கம்பனி பரிபாலனம் செய்தது.
(B) இலங்கையிலுள்ள ஒல்லாந்தரின் பிரதேசங்களை ஒரு கப்டின் ஜெனரல் ஆட்சி புரிந்தான்.
(C) ஒல்லாந்தரின் கீழைத்தேய சாம்ராஜ்யத்தின் தலைமை நிர்வாக நிலையம் பற்றேவியாவில் அமைந்திருந்தது.
(D) இலங்கையில் உள்ள ஒல்லாந்தரின் பிரதேசங்கள் ஐந்து கொம்மாண்டரி பிரிவுகளாக அமைக்கப்பட்டிருந்தன. (.........)

**29. ஸ்ரீ விக்கிரம ராஜசிங்கன்**

(A) ஸ்ரீ விக்கிரம ராஜசிங்கன் கண்டி இராச்சியத்தின் இறுதி அரசன் ஆவான்.
(B) அரச பதவி பெறுவதற்கு முன்பு ஸ்ரீ விக்கிரம ராஜசிங்கன் கண்ணசாமி எனும் பெயரைக் கொண்டிருந்தான்.
(C) பிரதம அதிகாரியான பிலிமத்தலாவையை அவன் அரச பதவி பெறச் செய்தான்.
(D) ஸ்ரீ விக்கிரம ராஜசிங்கன் பத்திரிப்புவ (எண்கோண மண்டபத்தை) என்பதனைக் கட்டினான். (.........)

**30. மது ஒழிப்பு இயக்கம்**

(A) மது ஒழிப்பு இயக்கத்தின் முதலாவது தலைவர் D.B. ஜயதிலக
(B) காலனித்துவ அரசாங்கத்தின் மதுவரிக் கொள்கைக்கு எதிரான இயக்கமாக மது ஒழிப்பு இயக்கம் தோன்றியது.
(C) சேனாநாயக்க குடும்பத்தினரே மது ஒழிப்பு இயக்கத்தின் பிரதான நபர்களாக விளங்கினார்கள்.
(D) மது ஒழிப்பு இயக்கத்தின் பலமான எதிர்ப்பின் விளைவாக அரசாங்கம் மதுவரிக் கொள்கையை மாற்றிக் கொண்டது. (.........)

- **31 - 35** வரையுள்ள எல்லா வினாக்களிலும் சரியான விடையைத் தெரிவுசெய்து, அதன் **இலக்கத்தை அடைப்புப் புள்ளிக் கோட்டின் மீது** எழுதுக.

**31. மகாவம்சம் எதனை விஜயனுடைய தலைநகரம் என்று குறிப்பிடுகின்றது?**

(1) சிறிசவத்துபுர (2) அநுராதபுர (3) லங்காபுர
(4) உபதிஸ்ஸகம (5) தம்பபண்ணி (.........)

**32. லம்பகண்ண வம்சத்து முதலாவது அரசன் யார்?**

(1) சுப (2) வசப (3) கஜபாகு
(4) கோட்டாபய (5) தாதுசேன (.........)

**33. ரமஞ்ஞ தேசத்தின் மீது முதலாம் பராக்கிரமபாகு படையெடுத்தமை பற்றிக் குறிப்பிடும் கல்வெட்டு யாது?**

(1) திருவலங்காடு கல்வெட்டு (2) அம்பகமுவ கல்வெட்டு
(3) கல்விகாரைக் கல்வெட்டு (4) தேவநகல கல்வெட்டு
(5) இராமேஸ்வரம் கல்வெட்டு (.........)

**34. யாப்பகூவ இராசதானியின் முதலாவது அரசன் யார்?**

(1) மூன்றாம் விஜயபாகு (2) இரண்டாம் பராக்கிரமபாகு
(3) முதலாம் புவனேகபாகு (4) மூன்றாம் பராக்கிரமபாகு
(5) இரண்டாம் புவனேகபாகு (.........)

**35. எந்த தேசாதிபதியின் காலத்தில் உச்ச நீதிமன்றம் அமைக்கப்பட்டது?**

(1) பெட்ரிக் நோர்த் (2) தோமஸ் மெயிற்லன்ட் (3) றொபர்ட் பிறவுண்ரிக்
(4) வில்மட் ஹோர்டன் (5) ஸ்ருவர்ட் மக்கென்ஸி (.........)

[பக். 6 ஐப் பார்க்க

4564

- **36 - 40** வரையுள்ள வினாக்களில் இரண்டு கூற்றுகள் வீதம் தரப்பட்டுள்ளன. ஒவ்வொரு வினா தொடர்பாகவும் உள்ள கூற்றுச் சோடிக்குக் கீழே உள்ள அட்டவணையில் காணப்படும் **1, 2, 3, 4, 5** என்பவற்றில் மிகவும் பொருந்துவது எதுவென்பதைத் தெரிந்து **அதன் இலக்கத்தை அடைப்புப் புள்ளிக் கோட்டில்** எழுதுக.

| | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று |
|---|---|---|
| 1 | சரியானது | பிழையானது |
| 2 | சரியானது | சரியானது |
| 3 | பிழையானது | பிழையானது |
| 4 | பிழையானது | சரியானது |
| 5 | சரியானது | சரியானதும் **முதலாம்** கூற்றினை நன்றாக விளக்குவதுமாகும். |

| | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று | |
|---|---|---|---|
| **36.** | முதலாவது சங்கபேதம் வட்டகாமினி அபயனின் காலத்தில் ஏற்பட்டது. | கூடகண்ணதிஸ்ஸ என்ற அரசனுடைய ஆட்சிக்காலத்தில் மஹாயானக்கதை இலங்கையில் அறிமுகம் செய்யப்பட்டது. | (………) |
| **37.** | யோதவாவியை மகாசேனன் கட்டினான். | மாகனைத் துரத்திய மூன்றாம் விஜயபாகு தம்பதெனியவைத் தனது நிர்வாக நிலையமாக்கினான். | (………) |
| **38.** | ஆறாம் பராக்கிரமபாகு செங்-ஹோவைத் தோற்கடித்து இலங்கையை ஒன்றாக இணைத்தான். | உரோமன் கத்தோலிக்க சமயத்தை அறிமுகஞ் செய்தமையே போர்த்துக்கேயர் ஆட்சியின் முக்கியமாகக் குறிப்பிடத்தக்க விளைவாகும். | (………) |
| **39.** | போர்த்துக்கேயர்கள் சில சுதேசிய சமூக பொருளாதார நிறுவனங்களைத் தங்கள் பொருளாதார நிலைமைகளுக்குப் பயன்படுத்தினார்கள். | போர்த்துக்கேயர் கறுவா முதலான பொருட்களைக் குறைந்த விலைக்குப் பெற்றுக் கொள்வதற்கு, மரபு வழியான நிலபோக முறை, கட்டமைப்பு ஆகியவற்றைப் பயன்படுத்தியமை. | (………) |
| **40.** | சர்வஜன வாக்குரிமை வழங்கப்படாதென்று இலங்கைத் தேசிய காங்கிரஸ் பிரதிநிதிகள் டொனமூர் ஆணைக்குழுவிடம் தெரிவித்தமை. | இலங்கையிலுள்ள இந்திய வம்சாவழிச் சிறுபான்மையினர் தொடர்பாக திருமதி பண்டாரநாயக்கா 1964 ஆம் ஆண்டில் இந்தியப் பிரதமர் லால் பகதூர் சாஸ்திரியுடன் உடன்படிக்கை செய்தார். | (………) |

* *

[பக். 7 ஐப் பார்க்க

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2016 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2016 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2016

ඉතිහාසය I (II කොටස)
வரலாறு I (பகுதி II)
History I (Part II)

**25 T I**

**இலங்கை வரலாறு - ஆதி காலம் முதல் கி.பி. 1978 வரை**

**அறிவுறுத்தல்கள்:**

* **முதலாம்** வினாவுக்கும் வேறு ஏதாவது **மூன்று** வினாக்களுக்கும் விடை எழுதுக.
(**முதலாம்** வினாவுக்கு விடை அளிப்பதற்கு **இலங்கையின் புறவுருவப்படம்** வழங்கப்படும்.)

**பகுதி II**

**1.** உமக்கு வழங்கப்பட்ட புறவுருவப்படத்திலே மேலே தரப்பட்ட **இடங்கள் எல்லாவற்றையும் குறித்துப் பெயரிட்டு,** அவற்றுள் எவையேனும் **இரண்டினைப்** பற்றிச் சுருக்கமான வரலாற்றுக் குறிப்புகள் எழுதுக.

(i) யாழ்ப்பாண நகரம் (ii) சேனாநாயக்க சமுத்திரம் (iii) கதிர்காமம் (iv) வட மத்திய மாகாணம்
(v) கதம்ப நதி (vi) மஹியங்கனை (vii) கற்பிட்டி (viii) கொழும்பு

*(சரியாகக் குறித்துப் பெயரிட்ட ஒவ்வொன்றுக்கும் **01** புள்ளி; சிறுகுறிப்பு ஒவ்வொன்றுக்கும் **05** புள்ளிகள்)*

**2.** மேல்வரும் தலைப்புகளில் **இரண்டு** தொடர்பாக கி.பி. பதின்மூன்றாம் நூற்றாண்டு முடியும் வரை இலங்கை வரலாற்றில் புவியியற் காரணங்கள் ஏற்படுத்திய செல்வாக்கினை ஆராய்க.

(i) மத்திய மலைப்பிரதேசம்
(ii) ஆறுகள்
(iii) இந்தியாவிற்கு அண்மையிலான அமைவிடம் *(ஒவ்வொன்றுக்கும் 07 புள்ளிகள் வீதம்)*

**3.** "அரசியலைப்போல கலாசாரத்துறையிலும் தேவநம்பியதீசனின் ஆட்சிக்காலம் மிகுந்த முக்கியத்துவம் கொண்டதாகும்."

(i) தேவநம்பிய தீசனது ஆட்சிக்காலத்தில் இந்தியாவில் ஆட்சிபுரிந்த மோரிய அரசனின் பெயரைக் குறிப்பிடுக. *(01 புள்ளி)*

(ii) மகிந்த தேரரோடு கூடி இலங்கைக்குச் சென்ற பௌத்த துறவிகள் **இருவரின்** பெயர்களைக் குறிப்பிடுக. *(02 புள்ளிகள்)*

(iii) மகிந்த தேரர் இலங்கைக்குச் செல்வதற்கு முன்பு அங்கு நிலவிய சமய நம்பிக்கைகள் பற்றி ஒரு சுருக்கமான விளக்கவுரை எழுதுக. *(03 புள்ளிகள்)*

(iv) தேவநம்பிய தீசனின் ஆட்சிக்காலத்து அரசியல், பண்பாட்டு முக்கியத்துவத்தை நுணுக்கமாகப் பரிசீலனை செய்க. *(08 புள்ளிகள்)*

**4.** ரஜரட்டை நாகரிக காலத்தில் நீர்ப்பாசன முறையில் ஏற்பட்ட வளர்ச்சியை மேல்வரும் விடயங்கள் தொடர்பாகப் பரிசீலனை செய்க.

(i) குளங்களின் கட்டுமானத்தில் ஏற்பட்ட படிமுறையான வளர்ச்சி
(ii) நீர்ப்பாசனத் தொழில்நுட்பம் *(14 புள்ளிகள்)*

**5.** "நிசங்கமல்லன் பல சவால்களுக்கு முகங்கொடுத்த அரசனாவான்."

(i) நிசங்கமல்லன் எந்த அரச வம்சத்தைச் சேர்ந்தவன்? *(01 புள்ளி)*

(ii) அவனுக்கு முன்பு நாடு முழுவதையும் இணைத்துப் பொலன்னறுவையிலிருந்து ஆட்சி புரிந்த மன்னர் **இருவரின்** பெயர்களைக் குறிப்பிடுக. *(02 புள்ளிகள்)*

(iii) பண்பாட்டுத்துறையில் நிசங்கமல்லன் ஏற்படுத்திய சாதனைகளைப் பற்றி ஒரு சுருக்கமான விளக்கவுரை எழுதுக. *(03 புள்ளிகள்)*

(iv) நிசங்கமல்லன் எதிர்நோக்கிய சவால்களைச் சுருக்கமாகக் குறிப்பிட்டு, அவன் எவ்வழிகளில் வெற்றி கொண்டான் என்பதை ஆராய்க. *(08 புள்ளிகள்)*

[பக். 8 ஐப் பார்க்க

**6.** (i) கண்டி இராச்சியத்தின் மீது போர்த்துக்கேயர் படையெடுப்பதற்கு ஏதுவான காரணங்களை ஆராய்க. *(06 புள்ளிகள்)*

(ii) அந்தப் படையெடுப்புகள் ஏன் தோல்வியடைந்தன? *(08 புள்ளிகள்)*

**7.** 1848 இல் பிரித்தானியருக்கு எதிராக கிளர்ச்சி ஏற்படுத்த ஏதுவான காரணங்களை நுணுக்கமாகப் பரிசீலனை செய்க. *(14 புள்ளிகள்)*

**8.** **(A)** பகுதிக்கு **அல்லது** **(B)** பகுதிக்கு மட்டும் விடை எழுதுக.

**(A)** டொனமூர் அரசியலமைப்பின் பிரதான அம்சங்களைப் பரிசீலனை செய்க. *(14 புள்ளிகள்)*

**(B)** 1978 ஆம் ஆண்டு அரசியலமைப்பின் அடிப்படை அம்சங்களைப் பரிசீலனை செய்க. *(14 புள்ளிகள்)*

**9.** மேல்வருவனவற்றுள் எவையேனும் **இரண்டின்** வரலாற்று முக்கியத்துவம் பற்றிச் சுருக்கமான குறிப்புகள் எழுதுக.

(i) தம்பதெனிய அரசர் காலத்து இலக்கியம்

(ii) ஆரியச் சக்கரவர்த்தி வம்சம்

(iii) ஆறாம் பராக்கிரமபாகு

(iv) சீதாவாக்க இராச்சியம்

(v) பொன்னம்பலம் அருணாசலம்

(vi) இலங்கையில் சுதந்திரத்துக்குப் பிற்பட்ட காலத்து சுதேச விவசாயம் பற்றிய கொள்கை

*(ஒவ்வொன்றுக்கும் 07 புள்ளிகள் வீதம்)*

***

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2016 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2016 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2016

ඉතිහාසය I
வரலாறு I
History I

25 T

ප්‍රශ්න අංකය / வினா இல. / Question No. 1

විභාග අංකය / சுட்டெண் / Index No. ……………………

